4 பக்கங்கள் 20 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 | மதுரை | 15-5-74 | புதன் | மலர் 112

## அகில இந்திய ரேடியோ ஊழியர்கள் போர்க்குரல்!

புதுடெல்லி, மே, 13—

அகில இந்திய ரேடியோவின் எஞ்சினியரிங் ஊழியர்கள் தங்கள் கோரிக்கைகள் ஒருவாரத்திற்குள் ஏற்கப்படாவிட்டால் வேலைநிறுத்தத்தில் இறங்கப்போவதாக எச்சரித்துள்ளனர்.

இரவுநேர வேலை செய்வதற்கு சம்பளம் கொடுக்க வேண்டும் ரெயில்வே தொழிலாளர்களுக்கு எதிரான பொய்ப்பிரச்சாரத்தைக் கைவிடவேண்டும் என்றும் கோருகின்றனர்.

## இரயில்வே போராட்டம் பாட்டாளிவர்க்க சர்வதேச ஒற்றுமை

டோக்கியோ, மே 11—

இந்திய இரயில்வேத் தொழிலாளர்களின் போராட்டத்துக்கு ஜப்பான் போக்குவரத்துத் தொழிலாளர்கள் தமது பேராதரவைத் தெரிவித்துள்ளார்கள்.

கைது செய்யப்பட்டுள்ள இரயில்வேத் தொழிலாளர்களையும் தலைவர்களையும் விடுதலை செய்யாவிட்டால், இங்குள்ள இந்தியத் தூதரகத்தை அடித்து நொறுக்கிவிடுவோம் என்று 10 இலட்சம் உறுப்பினர்களைக்கொண்ட அகில ஜப்பான போக்குவரத்துத் தொழிலாளர் சங்கம் எச்சரித்துள்ளது.

## ரயில்வே தொழிலாளரிடையே தோழர் ஏ. கே. ஜி.

திருச்சூர், மே 13—ரயில்வே தொழிலாளர்களின் வேலைநிறுத்தம் ஆரம்பித்த மே, 8ம் தேதியன்று காலையில் தோழர் ஏ. கே. கோபாலன் திருச்சூரில் (கேரளம்) உள்ள ரயில்வே காலனிக்குச் சென்றார். அங்கு அவருக்கு ரயில்வே தொழிலாளர்கள் உற்சாக ஆரவாரத்துடன் சிறப்பான வரவேற்பளித்தனர்.

துணைவியார் சுசிலா கோபாலன், மகள் லைலா ஆகியோருடன் சென்ற தோழர் ஏ. கே. ஜி. ஒரு ரயில்வே தொழிலாளரின் பெண் குழந்தை மாலையிட—கூடியிருந்த தொழிலாளர்கள் முழக்கங்களை எழுப்ப வரவேற்கப்பட்டார்.

காலனிக்கு விஜயம் செய்த தோழர் ஏ. கே. ஜி. ரயில்வே தொழிலாளர்களின் நிலைமைகளைக் கேட்டறிந்து கொண்டார்.

ஒவ்வொரு தொழிலாளியும் அவர்களது குடும்பங்களும் கலந்து கொண்ட பெரும் கூட்டத்தில் அவர் பேசினார்.

# நாடெங்கும் இன்று பொதுவேலைநிறுத்தம்

மதுரை, மே. 15—

இன்று அகில இந்தியா முழுவதும் பொது வேலைநிறுத்தம்.

இந்திய வரலாறு கண்டிராத மகத்தான இரயில்வேத் தொழிலாளர்களின் வேலைநிறுத்தத்தை ஆதரித்து நடக்கும் அறப்போர்.

அகில இந்திய தொழிற்சங்கங்களான இந்தியத் தொழிற்சங்க மையம் (சி ஐ டி யூ) அகில இந்தியத் தொழிற்சங்க காங்கிரஸ் (ஏ ஐ டி யூ சி) இந்து மஸ்தூர் சபா (எச் எம் எஸ்) இந்து மஸ்தூர் பஞ்சாயத்து (எச் எம் பி) ஆகிய மத்திய தொழிற்சங்கங்கள் விடுத்த அறைகூவலுக்கேற்ப நடைபெறும் இந்தப் பொதுவேலை நிறுத்தத்தில் நாடு முழுவதும் உள்ள பாட்டாளி மக்கள் கலந்து கொள்கிறார்கள்.

நடைபெறுகின்ற இரயில்வேத் தொழிலாளர்களின் போராட்டம் அவர்களது சொந்தப் பிரச்னைக்காக மட்டுமல்ல.

அனைத்துத் தொழிலாளர்களையும், பொதுமக்களையும் பாதிக்கும் இன்றைய விலைவாசி உயர்வுக்குப் பொறுப்பாளி யார்? வாழ்க்கை வாழ முடியாத நிலையை உருவாக்கியது யார்?

இந்திரா அரசின் வரி விதிப்பு—நோட்டு அச்சடித்தல்—கள்ளமார்க்கெட் பதுக்கல் கொள்கை தானே?

இந்தப் பிற்போக்குக் கொள்கையை நொறுக்கிய விழும் முதல் பெரும் அடியே ரயில்வே தொழிலாளர் போராட்டம்!

20 லட்சம் ரயில்வே தொழிலாளர்கள்! சுமார் 120 சங்கங்கள்! தனித்தனியே பிரிந்து கிடந்த இந்த 20 இலட்சம் இரயில்வேத் தொழிலாளர்கள் சங்கங்கள் அனைத்தும் இன்று எழுச்சிபெற்று ஒன்றிணைந்து திரண்டதே மகத்தான தொரு நிகழ்ச்சியாகும். இப்படை தோற்றால் வேறு எப்படை வெல்லும்?

### நீதிகேட்க

போனஸ் கேட்பது தவறா? ஏனைய பொதுத்துறை ஊழியர்களுக்குத் தரும் சம்பளம் கோருவது தவறா? அவர்களது ஆறு அம்சக் கோரிக்கைகளில் ஒன்றிலாவது நியாயமில்லை என்று கூறும் துணிச்சல் இந்திராகாந்திக்கு உண்டா? இல்லை. ஆனால் வேறு வகையான துணிச்சல் அவருக்குண்டு. அதனை மாநில அரசுகளின் போலீஸ் மத்திய ரிசர்வ் போலீஸ் ராணுவம் ஆகிய ஆயுதம் தாங்கிய வெறியர்களைக் கொண்டு அடக்கிவிடலாம் என்ற துணிச்சல் அவருக்குண்டு.

இன்னும் என்றும் பேச்சுவார்த்தை நடக்கும்போதே தலைவர்களை கைது செய்தது ஏன்?

அடுத்து இரயில்வேத் தொழிற்சங்கங்களின் முன்னணி ஊழியர்களையும்—வேலைநிறுத்தத்தில் கலந்து கொண்ட தொழிலாளர்களையும் கைது செய்து காவலில் வைத்தது ஏன்?

அது மட்டுமா? இரயில்வேத் தொழிலாளர்களின் மீது மட்டும் அடக்குமுறை ஏவினால் போதாது. அவர்களது குடும்பங்களின் மூலம் நிர்ப்பந்தம் செய்ய வேண்டும் என்று திட்டமிட்டு தொழிலாளர்களின் குடியிருப்புகளில் நுழைந்து தொழிலாளர்களை வலுக்கட்டாயமாக வருமாறு—கருங்காலி வேலை செய்யும்படி இந்திரா அரசின் ரிசர்வ் போலீசும் கருணாநிதி அரசின் போலீசும் பட்டாளப் படுத்துகின்றனர். மறுப்பவர்கள் நொறுக்கப்படுகின்றனர். சிறையில் அடைக்கப்படுகின்றனர். அவர்களது மனைவி மக்கள்— மற்றும் குடும்பத்தினரை அடித்து நொறுக்குகின்றனர். இழிவுபடுத்தப்படுகின்றனர்.

இவ்வளவு நீசத்தனமான—பாசிசத்தனமான அடக்குமுறைகள் ஏவிவிடப்பட்டபோதிலும் மசங்காது—உறுதியோடு ஒற்றுமையாக போராட்டம் நடந்து வருவது கண்ட ஆட்சியாளர்கள்—தமது எண்ணம் பலிக்காமல் போகவே—பொய்ப்பிரச்சாரத்தில் இறங்கியுள்ளனர். கோயபல்சும் தோற்றுப் போவான்.

சரக்கு வண்டிகள், நிலக்கரி வண்டிகள், பிரயாணிகள் வண்டிகள் ஓடுகின்றனவாம். வானொலிச் செய்திகள் பத்திரிகை அறிக்கைகள் அறிவிக்கின்றன. தமது பொய்ப்பிரச்சாரத்தை நாட்டு மக்கள் நம்ப வேண்டும் என்பதற்காக, பயிற்சியற்றார்களையும், எஞ்சின் பாதுகாப்புப் படையின் ஒரு பிரிவினரையும் விட்டு ஓரிரு வண்டிகளை அங்குமிங்கு ஓட்டும்படிச் செய்கின்றனர்.

இந்த வண்டிகள் பிரச்சாரத்திற்காக விடப்படுபவை என்பதையும், பயிற்சியற்றவர்களால் ஓட்டப்படும் இவ்வண்டிகளால் எப்பொழுதும் ஆபத்து நேரிடலாம் என்பதையும் உணர்ந்துள்ள பொதுமக்கள் இந்த வண்டிகளில் ஏறுவதேயில்லை. 'காலி' வண்டிகளாகவே போகின்றன.

இதனால் பணம் கோடிக்கணக்கில நஷ்டம். ஆனால் அதிகார மமதை கொண்ட ஆட்சியாளர்களுக்கு அதைப்பற்றித் தான் கவலை இல்லையே!

அவர்களுக்கு கவலையில்லை என்றால் இந்த நாட்டு மக்கள் கவலையற்றவர்களாயிருக்க முடியுமா?

மக்களுக்கு அக்கறை உண்டு என்பதைக் காட்டவே இன்று மே 15-ல் இந்த ஆதரவு வேலைநிறுத்தம் இந்திய நாடெங்கும் நடைபெறுகிறது.

## சாதகமான அறிவிப்பு வந்தாலே வேலை நிறுத்தம் வாபஸாகும்

### போராட்டக் குழு அறிக்கை

புதுடில்லி, மே 13—

3 அம்ச ஆலோசனை முன்வைக்கப் பட்டிருப்பதாக இந்திய அரசு தெரிவித்தது,

1. ரயில்வே தொழிலாளர் தலைவர்களை விடுதலை செய்வது.
2. பேச்சுவார்த்தை தொடங்குவது.
3. அதே சமயத்தில், வேலைநிறுத்தத்தை வாபஸ் பெறுவது.

இது சம்பந்தமாக, ரயில்வே தொழிலாளர்களின் அகில இந்திய போராட்டக் குழு தனது ஆலோசனைகளைத் தெரிவித்துள்ளது.

இப்படி மூன்று பிரச்சினைகளையும் முடிச்சுப்போடுவதை போராட்டக்குழு நிராகரிக்கிறது.

"தலைவர்களை விடுதலை செய்வதும், பேச்சு வார்த்தை நடத்துவதும் சரி, அதே சமயத்தில் ஸ்ட்ரைக்கை வாபஸ் பெறக் கோருவதை நிராகரிக்கிறோம்." என்று தெரிவித்திருக்கிறது.

### இடதுசாரிக் கட்சிகள் கருத்து

இதுசம்பந்தமாக, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி, வலது கம்யூனிஸ்ட்கட்சி; சோஷலிஸ்ட் கட்சி; மற்றுமுள்ள இடதுசாரிகட்சிகள், 'இந்திய அரசாங்கம் பேச்சு வார்த்தை நடத்த விரும்புவதாக சொல்லிக்கொண்டே வேலை நிறுத்தத்தை உடைக்க, தீவிர முயற்சிகளில் இறங்கி வருகிறது. தொழிலாளர்களின் ஒன்றுபட்ட போராட்டத்தை உடைத்து. அந்த பலத்தின் அடிப்படையில் தொழிலாளர்களுடன் பேச்சு நடத்த அரசு முற்படுகிறதென்றும் — பொருளாதாரமீட்சி, சமூகநீதி போன்ற பிரச்சினைகளில அரசு அனுதாப லட்சணம் இப்படி இருப்பதால், புதிதாக பேச்சுவார்த்தை நடத்துவதால என்ன பலன் ஏற்படப்போகிறது?' என்றும் போராட்டக் குழுவுக்குத் தெரிவித்துவிட்டன,

### மார்க்சிஸ்ட்கட்சி கருத்து

போனஸ் பிரச்சினையிலும் பொதுத்துறைத் தொழிலாளர்களுக்குச் சமமாக இரயில்வே தொழிலாளர்களையும் நடத்தும் பிரச்சினையிலும், அரசாங்கத்திடமிருந்து எந்தவிதமான சமிக்ஞையும் வரவில்லை என்பதோடு; அவ்விரு முக்கிய பிரச்சினைகளையும் பேச்சுவார்த்தையில் சேர்க்கப்படும் என்ற தெளிவான வாக்குறுதி கூட அரசாங்கத்திடமிருந்து வராத போது, ஸ்ட்ரைக்கை வாபஸ் பெறுங்கள் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி எப்படி கேட்க முடியும்!—என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்கள் கூறுகிறார்கள்.

போனஸ், பொதுத்துறைக்கு சமமாக ஊதியம் போன்ற கோரிக்கைகளில் அரசினரிடமிருந்து அனுதாபமான இணக்கம் ஒன்றும் வராத நிலையில், ஸ்ட்ரைக்கை வாபஸ் வாங்கினால், அது தொழிற்சங்க இயக்கத்தின் தீவிரத்தன்மையையே தகர்த்து விடும் என்றும், ஐ. என். டி. யூ. சி. யின் கையில் விளையாடுவதாக முடியும் என்று இடதுசாரி தொழிற்சங்கத் தலைவர்கள் எச்சரித்துள்ளார்கள்.

### போராட்டக் குழுவுக்கு எதிர்க் கட்சிகள் கடிதம்

கடந்த 10-ம் தேதியன்று பார்லிமெண்டிலுள்ள பல்வேறு எதிர்க்கட்சிகளின் பிரதிநிதிகளும் பிரதம மந்திரியைக் கண்டு ரெயில்வே ஸ்ட்ரைக் பற்றி விவாதித்த பிறகு—விவாதம் குறித்து போராட்டக் குழுவுக்கு ஒரு கூட்டுக் கடிதம் எழுதினார்கள்.

அக்கடிதத்தில், "நாங்கள் பிரதமரைக் கண்டு விவாதம் நடத்தினோம். கைது செய்யப்பட்ட தலைவர்களையும் ரயில்வே ஊழியர்களையும் விடுதலை செய்ய வேண்டுமென்றும் பேச்சுவார்த்தையை உடனே ஆரம்பிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தினோம். அரசாங்கத் தரப்பிலே, அதே சமயத்தில் வேலை நிறுத்தத்தையும் வாபஸ் பெறவேண்டுமென்று வற்புறுத்தியதால், முட்டுக்கட்டை நிலைமை ஏற்பட்டிருக்கிறது'

இது விஷயத்தில் நாங்கள் எந்த முடிவும் எடுக்க முடியாதென்றும்—முடிவு எடுக்க வேண்டியவர்கள் போராட்டக் குழுவினரே தவிர, வேறு யாரும் அல்ல என்று கூறிவிட்டோம். உங்களுக்கும் விஷயத்தை அறிவித்துவிட்டோம்"—என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

### போராட்டக்குழு எதிர்ப்பு

அரசு தரப்பின் மூன்று அம்ச கச்சரத்

(4-ம் பக்கம் பார்க்க)

## மத்திய அரசுக்கு பாட்டாளிவர்க்கம் செம்மையான பதிலடி தரும்

### ஏ. கே. கோபாலன் எச்சரிக்கை

திருச்சூர், மே. 13—கைதுகள், மிரட்டல்கள் அடக்குமுறைகள்— ஆகியவற்றைக் கொண்டு, ரயில்வே தொழிலாளர்களின் வேலைநிறுத்தத்தை சந்திக்கும் மத்திய அரசாங்கத்திற்கு, ஒன்றுபட்ட இந்திய பாட்டாளி வர்க்கம் செம்மையான பதிலடி கொடுக்கும் என்று தோழர் ஏ கே கோபாலன் எச்சரிக்கை விடுத்தார்.



மத்திய அரசு தனது அகந்தையையும், அடக்குமுறை முஷ்டியை உயர்த்துவதையும் நிறுத்திவிட்டு விவேகமான வழிக்கு வரவேண்டும் என்றும் அவர் வலியுறுத்தினார்.

திருச்சூரில் நடைபெற்ற பிருமாண்ட கூட்டத்தில் தோழர் ஏ. கே. ஜி. மேலும் கூறியதாவது:

ரயில்வே தொழிலாளர்கள் எழுப்பியுள்ள கோரிக்கைகள் மிகவும் நியாயமானது. நீதியானதாகும்.

பேசித் தீர்க்க வேண்டிய பிரச்னையை ஒரு வேலைநிறுத்தத்தில் கொண்டுபோய் தள்ளியது மத்திய அரசாங்கத்தின் தவறான கொள்கைதான் என்பது தெளிவு. இந்தப் போக்கை மத்திய அரசு மறுபரிசீலனை செய்ய வேண்டும்.

### அனைவரையும் விடுதலை செய்க

ஜார்ஜ் பெர்னாண்டஸ் உள்பட கைது செய்யப்பட்ட அனைவரையும் உடனே விடுதலை செய்ய வேண்டும். உணர்ச்சிகளுக்கு அடிமையாகாமல் விவேகமான வழியைத் தேர்ந்தெடுக்க அரசு முன்வரவேண்டும். சரியான இந்தவழியில் செல்லாமல், கைதுகள் மிரட்டல்கள், அடக்குமுறைகள் ஆகியவற்றைக் கொண்டு வேலை நிறுத்தத்தை நொறுக்கப்பார்க்கும் அரசாங்கத்துக்கு ஒன்றுபட்ட இந்தியப் பாட்டாளிவர்க்கம் செம்மையான பதிலடி கொடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

### தோள வலது கம்யூனிஸ்டுகளே உங்கள் நிலை என்ன?

இன்றைய சூழ்நிலையில் கேரளத்தின் ஆட்சிபீடத்தில் உட்கார்ந்திருக்கிற வலது கம்யூனிஸ்டுகள் தங்களது நிலை என்ன என்பதை மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் விளக்கிக்கூற வேண்டும். 1968 ல் வேலை நிறுத்தம் செய்த மத்திய அரசின் ஊழியர்களுக்கு எதிராக—அன்று கேரளத்தில் ஆட்சி நடத்திக்கொண்டிருந்த தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் அமைச்சரவை எவ்வித அடக்குமுறை நடவடிக்கையையும் எடுக்கவில்லை. போராட்டம் நடத்திய மத்திய அரசு ஊழியர்களுக்கு அவர்களது வீடுகளுக்குப்போய் இ. எம். எஸ். ஆதரவு தெரிவித்தார்.

ஆனால், இன்றோ அதற்கு மாறாக கேரளத்தில் போராடும் ரயில்வே ஊழியர்களுக்கு எதிராக இந்திய பாதுகாப்பு சட்டமும், உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டமும் பயன்படுத்துவதைத்தான் அச்சுத மேனனின் ஆளும் கூட்டம் செய்கிறது.

### மத்திய அரசுக்கு எச்சரிக்கை

மத்திய அரசு விவேகமான பாதைக்கு திரும்பாவிட்டால், என்ன தியாகம் செய்தேனும் போராட்டத்தை வெற்றிபெறச் செய்ய மக்கள் களம் புகுவர்.

—இவ்வாறு தோழர் ஏ. கே. கோபாலன் கூறினார்.

# இந்தியஅரசே, இரயில்வே தொழிலாளர்களை வஞ்சிக்காதே!
# அடக்குமுறைகளைகைவிடு! தலைவர்களைவிடுதலைசெய்!
# கோரிக்கைகளை ஏற்றிடுக! சமரசம் காண்க!

# தீக்கதிர்

## ஐயா! கலைஞரே!

10—5—74 தேதி மாலை திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த பெரம்பலூர் என்ற ஊரில் முதலமைச்சர் பேசியுள்ளார். அதுசமயம் ரயில்வே தொழிலாளர்களது வேலை நிறுத்தம் தொடர்பாக, அகில இந்தியரேடியோவின் பிரச்சாரத்தைக் கடுமையாகச் சாடினாராம்.

இரண்டு வருடங்களுக்கு முன்னர் சிம்சன் தொழிலாளர்களின் கிளர்ச்சியாலும், விவசாயிகள் கிளர்ச்சியாலும் தமிழக அரசுக்கு தொந்தரவு ஏற்பட்டிருந்த சமயத்தில் அகில இந்திய ரேடியோ ஏன் மௌனமாக இருந்தது என்று கேட்டுள்ளார் கலைஞர். மாறாக அன்று மோகன் குமாரமங்கலமும், சி. சுப்ரமணியமும்—மத்திய அரசின் அமைச்சர்களாக இருந்து கொண்டே—தமிழகத்துக்கு விஜயம் செய்து, தொழிலாளர்களை மாநில அரசுக்கு எதிராகத் தூண்டிவிட்டனரே என்றும் குற்றம் சாட்டியுள்ளார் திரு. மு. கருணாநிதி அவர்கள். தான் அவிழ்த்துவிட்ட அடக்குமுறை நடவடிக்கைகளுக்கு ஏன் துணைநிற்கவில்லை என்று மத்திய அரசை கேட்கிறார்!

அத்துடன் அவர் நிற்கவில்லை. அதற்கு மேலும் சென்று— "நேர்மாறாக இன்று நடக்கும் ரயில்வேத் தொழிலாளர்களது கிளர்ச்சியை ஒட்டி, சட்டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்ட தமிழக அரசு மத்திய அரசுடன் முழுமையாக ஒத்துழைக்கிறது"—என்றார்.

சட்டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்டுவதில,—அதாவது முதலாளித்துவ நிலப்பிரபுத்துவ அமைப்பின் சுரண்டலைப் பாதுகாக்க, அதன் பொருட்டு உழைக்கும் மக்களை ஒடுக்குவதில்—தமிழக அரசு மத்திய அரசைக்காட்டிலும் சிறந்த முன்னோடியானது என்று உலகத்துக்குப் பறைசாற்றுகிறார், நமது மாநில முதலவர்.

இதனை, பொருள் தெரியாமல பேசிவிட்டார் என்று நாம் கொள்ள முடியாது. எதையும் நன்கு ஆலோசித்துப் பேசுபவர் தான் திமுகவின் தலைவர். முதலாளித்துவச் சட்டத்தையும் முதலாளித்துவ ஒழுங்கையும்—மக்களது வாழ்வை வேட்டையாடி உறிஞ்சிக் குடிக்கத் துணைநிற்கும் சட்டத்தையும், அதற்கான ஒழுங்கையும் பாதுகாப்பதில, மற்ற அனைவர்களையும் விட தானே நிகரற்ற "இரும்பு மனிதன்" என்று விளம்பரப்படுத்திக் கொண்டுள்ளார் திரு மு. கருணாநிதி.

இதில இவர் பெரிய செயலவீரர் அல்லவா? அதனால 1500-க்கும் மேற்பட்ட இரயிலவே ஊழியர்களையும் அவர்களுக்கு ஆதரவானவர்களையும் சிறைகளுக்குள் தள்ளியுள்ளார். இவரது போலீஸ், வேலைநிறுத்தம் செய்துள்ள இரயிலவே தொழிலாளர்களை வீடு வீடாகத் தேடி "கருங்காலிகளாக வா" என்று மிரட்டி அழைக்கிறது,

இவரது போலீஸ், தொழிலாளர் குடியிருப்புகளில முகாம் அமைத்துக்கொண்டு, தொழிலாளர் குடும்பங்களை அச்சுறுத்துகிறது. மத்திய அரசுக்கு தெண்டனிட்டு தொண்டூழியம் புரிவதில இவருக்கு நிகர் இவரே!

இவர் கோரும் "மாநில சுயாட்சி" உழைக்கும் மக்களை ஒடுக்க, கூடுதல் வாய்ப்பை கேட்பதுதானே! உழைக்கும் மக்கள், அவரது "முஜிபுர் ரகிமான் வேடம்" கண்டு ஏமாறமாட்டார்கள். ஆனால, சுரண்டும் கூட்டத்தினரின் பாராட்டைப் பெறத்தானே அவர் "இரும்பு மனிதராக" காட்சியளித்து இரும்பு கரத்தை அடிக்கடி காட்டிவருகிறார்! "டபிள் ஆக்ட்" வேலை அதிக நாட்களுக்கு ஒடாது கலைஞரே!

## செங்கோட்டையில் பஞ்சாலை தொழிலாளர் சங்க ஆண்டுவிழா

செங்கோட்டை, மே. 12—

செங்கோட்டையில் பஞ்சாலைத்தொழிலாளர் சங்க ஆண்டுவிழா மேதினத்தன்று அவ்வூர் டவுண் ஹாலில் வைத்து தோழர் அழகசுந்தரம் சங்க உபதலைவர் தலைமையில் நடைபெற்றது.

தலைவர் முன்னுரை வழங்கிய பின் செயலாளர் தோழர் கே. ராமர் வருடாந்திர அறிக்கை சமர்பித்துப்பேசினார் அதன பின சங்க துணைத் தலைவர் தோழர் பி. சொரணம் தோழர் "குருமலை" விஜயன் (கேரளா) ஆகியோர் வாழ்த்திப் பேசினார்கள்.

### புதிய நிர்வாகிகள்

தலைவராக எ நல்லசிவன் உதவித்தலைவர் எம். அழகுசுந்தரம், செயலாளராக கே. ராமர். துணைச் செயலாளராக பிச்சையாவும், பொருளாளராக முருகையா ஆகியோரும், மற்றும் கே. சங்கரபாண்டியன், எஸ். பாண்டி, வி. சுப்பையா, வேலாயுதம், பிச்சையா, இருளப்பன், பொன்னையா, பரமசிவம், செல்லச்சாமி, வெங்கட்ராமன் ஆகியவர்கள் நிர்வாகிகளாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

அன்று இரவு செங்கோட்டை வண்டிமலச்சி அம்மன்கோவில் திடலில் மேதினப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு தோழர் கே. ராமர் தலைமை வகித்தார்.

தோழர்கள் எம் அழகுசுந்தரம், சி. காளிமுத்து, கே. சங்கரபாண்டியன், பி. சொரணம் மற்றும் கேரளாவைச் சேர்ந்த குருமலை விஜயன் ஆகியவர்கள் பேசினார்கள்.

1) விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தக் கோரியும்,

2) அரசாங்க மருத்துவமனைக்கு உடனடியாக பெண் டாக்டர் நியமிக்கக் கோரியும்,

3) இரயிலவே தொழிலாளர்களின் நியாய போராட்டத்தை ஆதரித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

### குமார்குழு

இந்த மதுரை குமார் குழுவினரின் இன்னிசை கலை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

---

கேரள கூட்டணி அரசு

## நீடிப்பதற்கான அடிப்படைகள் தகர்ந்துவிட்டன

### தோழர் இ. எம். எஸ். கூறுகிறார்



திருவனந்தபுரம் மே 12—

"கேரள அமைச்சரவைக்கு முஸ்லிம் லீக் சட்டமன்ற உறுப்பினர்கள் 6 பேர் தங்கள் ஆதரவை வாபஸ்பெற்று கொண்டதனால் அமைச்சரவை நீடிப்புக்கான அடிப்படையே தகர்க்கப்பட்டுள்ளது. எனவே, கேரள கூட்டணி அரசாங்கம் ராஜினாமாச் செய்ய வேண்டும்." என தோழர் இ. எம். எஸ். நம்பூதிபாட் நிருபர்களிடையே கூறினார்;

### தேர்தல் நடத்து

கேரள அரசுக்குரிய நம்பிக்கை வோட்டுகளை தெரிந்து கொள்ள அசெம்ளியை கூட்டவேண்டும் என அச்சுதமேனனுக்கு வலது கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய செயற்குழு கேட்டிருந்ததல்லவா?

அதுபற்றி தோழர் இ. எம். எஸ், நம்பூதிரிபாட் "அவ்வாறு செய்வது" கட்சி மாறிகளின் உதவியோடு அரசை நீடிக்கச் செய்வதற்காக கூட்டணி அரசுகளின் சிறப்புகளுக்கெதிரான நடவடிக்கையாகும்" என்று குறிப்பிட்டார். தோழர் இ. எம். எஸ். மேலும் அதற்கு மாறாக உடனடியாக சட்டசமையை கலைத்து விட்டு தேர்தல் நடத்தவேண்டும் என்று தெரிவித்தார்.

### அடிப்படைகள் தகர்ந்து விட்டன

தோழர் இ.எம்.எஸ். கேரள கூட்டணி அரசு அதனுடைய அடிப்படைகளையே இழந்து விட்டது என்பதற்கு கீழ்கண்ட காரணங்களை குறிப்பிட்டார்.

அதாவது கூட்டணி அரசின் அங்கங்களில் ஒன்றான முஸ்லிம் லீக் இரண்டாக உடைந்து விட்டது; மத்திய அரசின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்பட்டபோது, அத்தீர்மானத்தை பார்லிமெண்டில் வலது கம்யூனிஸ்ட் கட்சி ஆதரித்துள்ளது, எனவே காங்கிரஸ்பற்றிய வலது கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கையே மாறிவருகிறது,

ரயில்வே தொழிலாளர்களுக்கு ஆதரவாக எதிர்க்கட்சிகள் விடுத்துள்ள மே. 15-ந் தேதி அகில இந்திய பந்துக்கு வலதுகம்யூனிஸ்ட் கட்சியும் ஆதரவு தெரிவித்துள்ளது. கேரள கூட்டணியில உள்ள மற்றொரு கட்சியான புரட்சி சோசலிஸ்ட் கட்சியும் ரயில்வே போராட்டத்தில் காங்கிரஸ் கட்சியை எதிர்க்கிறது. எனவே காங்கிரசுக் கட்சியின் உதவியோடு கேரள கூட்டணி அரசு நீடிப்பதற்கான அடிப்படைகளே தகர்ந்து விட்டன எனத் தோழர் இ. எம். எஸ். தெரிவித்தார்.

## தந்தி, தபால் ஊழியர்கள் கண்டன பொதுக்கூட்டம்

திண்டுக்கல், மே. 13—

தந்தி தபால் ஊழியர்கள் சங்கசார்பில் ஆர். எம். எஸ் தோழர் ஆறுமுகம் தலைமையில் தலைவர்கள் கைது செய்யப்பட்டதைக் கண்டித்து கண்டன கூட்டம் நடந்தது. அனைத்துச்சங்கங்களின் சார்பில் தலைவர்கள் ரயில்வே தொழிலாளர்களுக்கு ஆதரவு தெரிவித்தும் அடக்கு முறையைக் கண்டித்தும் பேசினார்கள்.

திண்டுக்கல் சுவர்களிலும் தார்ரோடுகளிலும் ரயிலவே தொழிலாளர் போராட்டத்திற்கு ஆதரவு கோரியும் கைது செய்யப்பட்டோரை விடுதலை செய்யக் கோரியும் எழுதப்பட்டிருக்கிறது.

மத்திய அரசு ஊழியர்கள் இன்று காலை கருப்பு பேட்ஜ் அணிந்து மத்திய மாநில அரசுக்கு கண்டனம் தெரிவித்துக்கொண்டனர்.

15—5—74-ந் தேதி ஒரு நாள் கண்டன வேலை நிறுத்தத்திற்கு சகல சங்கங்களும் தங்களை தயார் செய்து வருகின்றனர்.

(ந. நி.)

## நாடாளு மன்றத்தை கலைக்க சோசலிஸ்ட் கோரிக்கை

புதுடில்லி, மே. 11—

"நாட்டிற்கு எப்போதும் இல்லாத நெருக்கடி இப்போது ஏற்பட்டுள்ளதால் நாடாளு மன்றத்தைக் கலைத்துவிட்டு மறு தேர்தல நடத்த வேண்டும் என்று சோசலிஸ்ட் கட்சி உறுப்பினர் சமர்குகா ஒரு தீர்மானத்தை நாடாளுமன்றத்தில் நேற்று தாக்கல் செய்தார்.

நாடாளுமன்றத்தில இக்கூட்டத் தொடர் நேற்றுடன் (10ந் தேதி) முடிவடைந்ததால், காலவரையின்றி ஒத்திவைக்கப் பட்டுள்ளது. எனவே சமர்குகாவின் தீர்மானத்தின் மீது, அடுத்த கூட்டத் தொடரில் விவாதம் நடக்கும்.




தமிழ் நாடு அரசு

## மின்சாரத்துறை அமைச்சர் கவனத்திற்கு

ஐயா,

தமிழ்நாடு அரசு மின்சார வாரியத்தின் திருவொற்றியூர் நகராட்சிப் பகுதியிலுள்ள மின்சார இலாகா செக்ஷன் ஆபீசர், உதவிப் பொறியாளர் ஆகியோர்க்கு திருவொற்றியூர் நகராட்சிப் பகுதிகளில் தெரு மின்சார விளக்குகள் எரியவில்லை என்று நகரமன்ற உறுப்பினர்கள் நேரில் சென்றும் எழுத்து மூலமாகவும், வாய் மூலமாகவும் சொன்னும் மின் விளக்குகளை எரிய வைப்பதில் எந்தவித அக்கறையும் செலுத்துவதில்லை.

எனனுடைய 8-வது வட்டப் பகுதி சுதந்திரபுரம், சதானந்தபுரம் பி ஏழை தாழ்த்தப்பட்ட ஆதி திராவிட மக்கள் வசிக்கும் இப்பகுதியில் மூன்று மாதங்களுக்கு மேலாக தெரு விளக்குகள் எரியாமல் இருந்து வருகிறது.

இது சம்பந்தமாக செக்ஷன் ஆபீசர், உதவிப் பொறியாளர் (மின்துறை) ஆகியோரிடம் நானே நேரில சென்று எழுத்து மூலம் புகார் செய்தும், இன்று வரை கவனிக்கப்படவில்லை.

திருவொற்றியூர் நகராட்சி ஆணையருக்கு, நகரமன்றத் தலைவரும் திருவொற்றியூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினருமான திரு. மா. வெ. நாராயணசாமி அவர்களிடம் எழுத்துமூலம் முறையிட்டு அதன்பிறகு நகரமன்றத் தலைவர் அவர்கள், மின்துறை தலைமைப்பொறியாளர், கோட்டப்பொறியாளர் ஆகியவர்களுக்குத் தெரிவித்து நேரில் வந்து எல்லாப் பகுதிகளையும் மேற்படி அதிகாரிகள் பார்வையிட்டுச் சென்றும் இன்றுவரை விளக்குகள் எரியவில்லை. கே. டால் மின்சார இலாகாவில டியூப் லைட், சோக், ஸ்டார்டர் போன்ற சாமான்கள் இல்லையென்றும், விலை ஏறிவிட்டதால் வாங்கவில்லை என்றும் இப்படி கூறிக்கொண்டு ஏழை ஆதி திராவிட மக்கள் வாழும் பகுதிகள் இருளில் மூழ்கடித்து வருகின்றார்கள். ஏழை ஆதிதிராவிட மக்களுக்கு தமிழ்நாடு அரசு மின்சாரத்துறை விளக்கேற்றும் லட்சணம் இதுதானா?

1972-ம் ஆண்டு மார்ச் மாதம் 30ந்தேதிய திருவொற்றியூர் நகர் மன்றத் தீர்மானம் எண் 328ன்படி ஏழை தாழ்த்தப்பட்ட மக்கள் வசிக்கும தியாகராயபுரம் பகுதிக்கு மின்விளக்கு போட தீர்மானம் நிறைவேற்றப்பட்டு கடிதம் ஆர் ஒ சி எண் 3999-72 பி5 அவர்கள் திருவொற்றியூர் மின்சார இலாகாவுக்குத் தெரிவித்து மேற்படி இலாகா மூலம் தெருவிளக்கு அமைக்கப் பணம் செலுத்தும்படி மின்சார இலாகாவினர் தெரிவித்து அதன்படி 10—8—73ல புத்தக எண் 8614, செக் எண் சி 8613 0 ரூ 2592—30 ரசீது எண் 89003 படி ரூ 2590ம் ஒப்பந்தப் பத்திரத்திற்கு ரசீது எண் 89002 படி ஆக மொத்தம் மேலே கூறியுள்ளபடி ரு 2592—30 செலுத்தப்பட்டுள்ளது.

ஆனால் இன்று வரை ஏழை ஆதிதிராவிட மக்கள் வாழும் தியாகராயபுரம் குடிசைப் பகுதிக்கு மின் விளக்குகள் அமைத்துத் தரவில்லை, அப்பகுதி மக்கள் நகரமன்ற உறுப்பினர் தான் கவனிக்கவில்லை என்று குறை கூறுகின்றார்கள். நான் பலமுறை அதிகாரிகளைக் கண்டு நேரில் சொல்லியும், நகரமன்றத் தலைவர் மா. வெ. நாராயணசாமி எம். எல் ஏ. அவர்கள் மூலம் தெரிவித்தும் கவனிக்கவில்லை.

இதுதான் ஆதிதிராவிட தாழ்த்தப்பட்ட மக்களுக்கு இந்த அரசு செய்யும் நன்மையா? என்பதை மின்சார இலாகா அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு வேண்டுகோள் விடுகின்றேன்.

டி. நாராயணசாமி
திருவொற்றியூர் நகராட்சிமன்ற மார்க்சிஸ்ட் கட்சி உறுப்பினர்
சென்னை-19,

---

ரயில் தொழிலாளர்க்கு எதிராக

## மத்திய அரசின் அவதூறு

### எம். பி.கள் கண்டன அறிக்கை

புதுடில்லி, மே. 12—

ரயில்வே வேலை நிறுத்தத்தை யொட்டி பத்திரிகைகளில் அரசாங்கம் வெளியிடும் விளம்பரங்களை பார்லிமெண்ட் உறுப்பினர்கள் கடுமையாக கண்டித்துள்ளனர்.

### மூர்க்கமான தாக்குதல்

அரசாங்கம் வெளியிட்டுள்ள விளம்பரமொன்றில் "எதிரிகள் செய்வதில் தோல்வியடைந்ததை ரயில்வே தொழிலாளர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள்" என்று கூறப்பட்டுள்ளது. இதனை, தொழிற்சங்க இயக்கங்கள் மீது குறிப்பாக ரயில்வே தொழிலாளர்கள் மீது தொடுக்கப்பட்ட மூர்க்கத்தனமான தாக்குதலாகும் என பார்லிமெண்ட் உறுப்பினர்கள் தங்கள் கூட்டறிக்கையின் மூலம் கண்டனம் தெரிவித்துள்ளனர்.

### அரசின் இரட்டை வேடம்

"ரயில்வே போராட்டம் சம்பந்தமாக, அமைச்சர்களமட்ட அளவில் தொழிற்சங்கத் தலைவர்களோடு பேச்சு வார்த்தை நடத்த முயற்சிக்கப்படுகிறது. இக்காலகட்டத்தில் நிர்வாகமட்டத்தில் போராடும் ரயில்வே தொழிலாளர்கள் மீது அடக்குமுறை அலைகள் கட்டவிழ்த்து விடப்படுகின்றன, இது ஒரு பக்கம் மறு பக்கம், ரயில்வே தொழிலாளர்களுக்கெதிராக, ரேடியோ, டெலிவிஷன், பத்திரிகைகள் ஆகியவற்றின்மூலம் மிகக் கேவலமான தவறான பிரச்சாரங்கள் செய்யப்படுகின்றன. எனவே, இம்மாதிரியான அரசாங்க இரட்டை வேஷங்களை கடுமையாக நாங்கள் கண்டிக்கிறோம்" என்றும் அக்கண்டன அறிக்கையில் கூறப்பட்டுள்ளது,

அவ்வறிக்கையில் நிரேன் கோஷ் (மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி) கோரே (சோசலிஸ்ட் கட்சி) இரா. செழியன் (திமுக) ஆகியோர் கையெழுத்திட்டுள்ளனர்.

திண்டுக்கல்லில்

## ரயில்வே தொழிலாளர் 55 பேர் கைது

திண்டுக்கல், மே. 13—

வேலைநிறுத்தப் போராட்டத்தில் இறங்கியுள்ள ரயில்வே தொழிலாளர்கள் ஒரு இடத்தில்கூடி அமைதியாக இருந்து வந்தனர், திடீர் என்று 9—5—74ந் தேதி காலை 11 மணிக்கு வத்தலக்குண்டு ரோட்டில் டூரிங் சினிமா தியேட்டர் பின்புறம் கூடி இருந்த தொழிலாளர்களை போலீசார் கைது செய்து லாரியில் ஏற்றி தாலுகா காவல் நிலையத்திற்கு கொண்டு சென்று அடைத்துள்ளனர்.

போராட்டக் கூட்டுக் கமிட்டி தோழர் அய்யனாரப்பன் உட்பட ஏராளமான தோழர்களையும் போலீஸ் கைது செய்துள்ளது.

தொழிலாளர்களின் குடியிருப்புகளில் போலீஸ் இரவும், பகலும் படைசூழ்ந்து கொண்டு அச்சுறுத்தி வருகிறது,

திண்டுக்கல்லில்

## பொது வேலை நிறுத்தம்

திண்டுக்கல், மே. 13—

போராடும் இரயில்வே தொழிலாளர்களுக்கு ஆதரவாக மே 15-ம் தேதியன்று இந்தியா முழுவதிலும் நடைபெறும் பொது வேலைநிறுத்ததையொட்டி திண்டுக்கல்லில் பொது வேலைநிறுத்தம் நடக்கிறது.

திண்டுக்கல் 11—5—74 மாலை 7 மணிக்கு குமரன் லாட்ஜ் ஹாலில் கூட்டம் நடைபெற்றது.

நகரசபை தலைவரும், முன்னேற்ற சங்க பேரவை தலைவருமான பொன், சீனிவாசன் தலைமை வகித்தார். தோழர் எஸ் ஏ தங்கராஜன், பொதுவேலைநிறுத்த அறைகூவலை விளக்கியபின அனைத்து சங்கப் பிரதிநிதிகளும்பேசினார்கள். 80 பிரதிநிதிகள் 15 சங்கங்களின் சார்பில் கலந்து கொண்டனர்.

இரயில்வே, தோல பதனிடும், பஞ்சாலை, மோட்டார் பாண்டியன் போக்குவரத்து சுருட்டு, முனிசிபல், பொது தொழிலாளர்சங்கம், சைக்கிள் ரிக்‌ஷா, குதிரைவண்டி, லோடுமேன் சங்கம், ஹோட்டல் தொழிலாளர் சங்கம், இரும்புப்பட்டறை, கைநெசவு, கைவண்டி, தையல்தொழிலாளர், டயர் வண்டி தொழிலாளர் சங்கம், அச்சு தொழிலாளர் ரைஸ் அண்டு ஆயில் மில் சங்கங்களின் சார்பில் பிரதிநிதிகள் கலந்து கொண்டனர்,

கீழ்க்கண்ட முடிவு ஏகமனதாக செய்யப்பட்டது.

வருகிற 15—5—74 புதன் கிழமையன்று அகில இந்திய இரயில்வே தொழிலாளர் வேலைநிறுத்தத்திற்கு ஆதரவளிக்கும் வகையில் திண்டுக்கல் நகரில் அனைத்துத் தொழிலாளர்களும், அனைத்து தொழிற்சங்கங்களும் பங்கெடுத்துக் கொள்ளும் வகையில் வேலைநிறுத்தம் செய்து. நகரில் பூரண அர்த்தாலும், மாலையில ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடத்துவதெனவும் இதற்கான அனைத்து நடவடிக்கைகளையும் பொன் சீனிவாசன் (திமுக), எஸ் ஏ தங்கராஜன் ஆகியோர் முன்னின்று கவனிப்பதென கூட்டம் முடிவு செய்தது.

மற்றும் அனைத்து அரசியல் கட்சி தலைவர்கள், பிரமுகர்கள், தொழிற்சங்கம், ஆகியவைகளுக்கு அழைப்பு விடுத்து அவர்களையும், போராட்டத்தில கலந்து கொள்ள கேட்டுக்கொள்வதுஎனவும் முடிவு செய்யப்பட்டது.

## ரிசர்வ் வங்கி ஊழியர்கள் இந்திராவுக்கு தந்தி

சென்னை, மே, 12—

தோழர் ஜார்ஜ் பெர்ணண்டஸ் மற்றும்பல இரயில்வேத் தொழிலாளர் தலைவர்கள் கைது செய்யப்பட்டதற்கு எதிர்ப்புத் தெரிவித்தும் கைதுசெய்யப்பட்ட தலைவர்களை உடனே விடுதலை செய்து கோரிக்கைகளுக்கு சுமுகத்தீர்வு காண வேண்டும் என்று வற்புறுத்தியும் சென்னையிலுள்ள ரிசர்வ் வங்கி ஊழியர்சங்கம் பிரதமர் இந்திராகாந்திக்கு தந்தி ஒன்றை அனுப்பியுள்ளது.

### வீர வணக்கம்

மேலும் கடந்த 2ந் தேதியன்று நடந்த ரிசர்வ் வங்கி ஊழியர் சங்க நிர்வாகக்குழுவின் அவசரக் கூட்டத்தில இரயில்வேத் தொழிலாளர்களுக்கு சகோதர ஆதரவைத்தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது, நியாயமான கோரிக்கைக்காக போர்க்களத்தில் இறங்கியுள்ள அவர்களுக்கு வீர வணக்கம் செலுத்தியும், அடக்குமுறையைக் கட்டவிழ்த்து விட்டுள்ள மத்திய அரசுக்குக் கண்டனம் தெரிவித்தும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இத்தீர்மானத்தின் நகலும் இந்திராகாந்திக்கு அனுப்பிவைக்கப்பட்டது,

## ஆசிரியர் கூட்டணி

தமிழ்நாடு தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள் கூட்டணியின் மாநிலத் துணைத் தலைவர் திரு ஆ. முத்துச்சாமி, விடுத்துள்ள அறிக்கையில் இரயில்வேத்தொழிலாளர்களின் ஒற்றுமைக் தப் பாராட்டித் தெரிவித்துள்ளார்.

வளர்ந்து வரும் தேவைகளின் அடிப்படையில் எழுப்பப்பட்ட கோரிக்கைகளை அரசு புறக்கணித்ததன் விளைவே இரயில்வேத் தொழிலாளர்களின வேலைநிறுத்தம் என்றும், எனவே கைது செய்யப்பட்ட தலைவர்களை உடனே விடுதலை செய்து பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காண வேண்டும் என்றும வற்புறுத்தியுள்ளார்!

ஒன்றுபட்ட தொழிலாளர் சக்தியை எத்தகைய சர்வாதிகாரங்களும் அடக்குமுறைகளும் இதுவரை வென்றதில்லை என்றும் எச்சரித்துள்ளார்,

## கார்ல் மார்க்ஸ் படிப்பகம் ஆண்டுவிழா

இராமேஸ்வரம், மே. 13—

இராமேஸ்வரத்தில் உள்ள காரல் மார்க்ஸ் படிப்பக முதலாவது ஆண்டுவிழாவும், மே தினப் பொதுக்கூட்டமும் கடந்த 1-ந் தேதி தியாகி தோழர் நாராயணராவ் திடலில் அமைத்திருந்த அலங்கார மேடையில் தோழர் எஸ். குருமூர்த்தி தலைமையில நடந்தது.

படிப்பகச் செயலாளர் தோழர் ஆர். சுப்பிரமணியம் படிப்பக ஆண்டறிக்கை வாசித்தார். தோழர்கள் திருமாறன், மோகன்ராஜ், இரா. இலக்குமிகாந்தன், டி. எஸ். எம். ஆவுலநைனா [செயலாளர், மார்க்சிஸ்ட்) ஆகியோர், மாமேதை கார்ல மார்க்ஸின் தத்துவங்கள் பற்றியும், மே தின வரலாறு பற்றியும், அகில இந்திய இரயில்வே தொழிலாளர் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும் உரையாற்றினார்கள்.

இரவு 9 மணி அளவில மதுரை தியாகிமணவாளன் குழுவினரின் அரசியல் கலைநிகழ்ச்சி சிறப்பாக நடைபெற்றது.

வடபாதிமங்கலத்தார்

# சர்க்கரை ஆலையின் அக்ரம நடவடிக்கை

## விவசாய சங்கச் செயலாளர் கோ. வீரய்யன் கண்டனம்

திருவாரூர், மே. 13—

வடபாதி மங்கலத்தாருக்குச் சொந்தமான திரு ஆரூரான் சர்க்கரை ஆலையின் அக்கிரம நடவடிக்கைகளால் கரும்பு விவசாயிகள் பெரும் அவதிக்கு உட்பட்டுள்ளார்கள் என்றும் இப்பிரச்னையில் அரசு உடனே தலையிட்டு உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும் என்றும் தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் செயலாளர் தோழர் கோ. வீரய்யன் ஓர் அறிக்கையில் குறிப்பிட்டுள்ளார்.

அந்த அறிக்கை வருமாறு:—

வடபாதிமங்கலம் வி எஸ் தியாகராஜ முதலியாருக்கு சொந்தமானதும், தஞ்சை மாவட்டத்திலிருக்கும் ஒரே சர்க்கரை ஆலையுமான திரு ஆரூரான் சர்க்கரை ஆலையுடன் உடன்பாடு செய்து கொண்டு ஏராளமான சிறு விவசாயிகளும் தங்கள் நிலங்களில் கரும்பு பயிர் செய்து வருகிறார்கள்.

இதில் குறிப்பாக மாயூரம் தாலுகாவில் பல கிராமங்களில் கரும்பு பயிர் செய்துள்ளவர்களுடன் திருஆரூரான் சர்க்கரை ஆலை கரும்புகளை தாம் வாங்கிக் கொள்வதாக உடன்பாடு செய்து கொண்டிருக்கிறது.

### உடன்பாட்டை காலில்போட்டு மிதிக்கும் நிர்வாகம்

அவ்வாறு உடன்பட்டு செய்து கொண்ட நிர்வாகம் கரும்பு பயிரை வெட்ட வேண்டிய காலத்தில் வெட்டுவதற்கான உத்தரவை வழங்காமல தேக்கி வைத்து உடன்பாட்டைக் காலில்போட்டு மிதித்துவருகிறது.

இதன் விளைவாக நம்பு பயிரிட்ட விவசாயிகளின் வாழ்வும் துவைத்து மிதிக்கப்படுகின்றது.

காவிரி பிரிவின் கரும்பு விவசாயிகள் சங்கத்தலைவர் அஞ்சாவார்த்தலைமுருகையன் அவர்களுடன் நான் கரும்பு சாகுபடி வயல்களை பார்த்தேன்.

பிப்ரவரி, மார்ச் மாதங்களில் வெட்டிப் பட வேண்டிய கரும்பு இன்னும் வெட்டப்படாமல் இருப்பதால் அதிலுள்ள சாறு வற்றிக் காய்ந்து அடுப்பெரிக்கும் அளவிற்கு விறகைப் போன்ற நிலையிலுள்ளது. இனி வெட்டிக் கொண்டு போனாலும் 40 டன் இருக்கவேண்டிய கரும்பு 30 டன்கள் கூட இருக்காது. இதில் பாதிப்பு ஒருபக்கம், மறுபக்கம் கரும்பு விவசாய செலவுக்கு வாங்கிய கடனும், விவசாயத்திற்கான உரக்கடனும் கொடுக்க முடியாமல் அவதியுறுகின்றார்கள்.

ஆனால் கடன்களை வசூலிக்க கூட்டுறவு சங்கங்கள் மிகக்கடுமையாக நடவடிக்கைகளை மேற்கொள்ளுகின்றனர்,

இவ்வாறு கடன்காரர்கள் தொல்லை, கட்டிங் ஆர்டர் கிடைக்காத அவதி, வெட்டினாலும் காய்ந்து போனதால் ஏற்படும் எடை குறை நஷ்டம் இவையனைத்தும் சேர்ந்து அவர்களை வாட்டி வதைக்கின்றன.

### கரும்பு விவசாயிகள் அவதியும, அமைச்சரின் பொன்னுடை பூரிப்பும்

வடபாதி மங்கலத்தாரோ திருவாரூரில் தேரோட்டமும், தெப்பஓட்டமும் நடத்தி வருகின்றார். கரும்பு விவசாயிகளோ அவதிகளினால் திணறுகிறார்கள். வாழ்வின் ஓரத்துக்கே ஓடிவிடும் நிலையிலிருக்கிறார்கள். நமது உணவு அமைச்சரோ வடபாதி மங்கலத்தாரின் பொன்னுடையில் பூரிப்படைக்கின்றார்.

காவிரிப் பிரிவு கரும்புவிவசாயிகள் சங்கமும், பெயர்ப் பலகையோடு இருக்கிறது. இதனை எதிர்த்து எந்த நடவடிக்கையும் மேற்கொள்ள தயாரில்லை,

### நிறைவேற்றுக

எனவே, அரசு காலந் தாழ்த்தாது உடனே கரும்பு வெட்டுவதற்கான கட்டிங் ஆர்டரை உடன வழங்குதல், தற்போது வெட்டும் கரும்புக்கு 25% விலை கூடுதலாக கொடுத்தல், கரும்புக்கான தொகை ஆலையிலிருந்து வரும்வரை அவர்களின் கடன் வசூலை நிறுத்தி வைத்தல் ஆகிய கோரிக்கைகளை நிறைவேற்றும்படி கேட்டுக் கொள்கிறேன்.

இந்த கோரிக்கைகளை அடைய கரும்பு விவசாயிகள் அனைவரும் உறுதியுடன் ஒன்றுபட்டு செயல்பட முன்வருமாறு அறைகூவி அழைக்கின்றேன். உங்களுடன் ஏழை விவசாயிகளும், விவசாய தொழிலாளர்களும் ஆதரவாக நிற்பார்கள் எனக் கூறிக்கொள்கிறேன்.

இவ்வாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

---

## அடிப்படை உரிமைகளும் மறுக்கப்படுகின்றன

# சென்னையில் போலீஸ் காட்டு தர்பார்

சென்னை, மே, 13—

இரயில்வே தொழிலாளர்கள் போராட்டத்தை நசுக்குவதற்காக மாநில—மத்திய அரசுகள் சகலவிதமான அடக்குமுறை கருவிகளையும் பயன்படுத்தி வருகிறது. இதற்குமேலாக தொழிலாளர்களின் அடிப்படை உரிமைகளான ஊர்வலம், பொதுக்கூட்டங்கள் நடத்தும் உரிமைகளும் பறிக்கப்பட்டு விட்டன.

இரயில்வே தொழிலாளர்கள் போராட்டத்தை முறியடிப்பதற்கான எல்லா நடவடிக்கைகளுக்கும் பாதுகாப்பு அளிக்கப்படுவதுடன் அந்தக் கருங்காலிகளுக்கும் சீர் குலைவாளர்களுக்கும் பொதுக் கூட்டங்கள் நடத்த அனுமதியும் வழங்கப்படுகிறது.

### அனுமதி மறுப்பு

சென்னை நகர தொழிற்சங்க கூட்டமைப்பின் சார்பில் சி ஐ டி யூ, ஏ ஐ டி யூ சி, உழைக்கும் மக்கள் மன்றம ஆகியவற்றுடன் இணைந்து 7-5-74 அன்று ஐபனவரத்தில் ஏற்பாடு செய்யப்பட்ட பொதுக்கூட்டத்திற்கும் 8-5-74 அன்று ஏற்பாடு செய்யப்பட்ட தொழிலாளர் பேரணிக்கும் போலீஸ் அனுமதி மறுக்கப்பட்டுள்ளது.

தமிழக அரசின் இந்த ஜனநாயக விரோத நடவடிக்கைக்கு சி ஐ டி யூ வின் சென்னை—செங்கை மாவட்டக்கமிட்டி கண்டனத்தைதெரிவித்துள்ளது.

சென்னை தொழிற்சங்க கூட்டமைப்பின் கன்வீனர் தோழர் ரங்கராஜனும், அரசின் நடவடிக்கைக்கு கண்டனம் தெரிவித்துள்ளார்.

---

## தஞ்சை மாவட்டத்தில்

# வீடுகளில் அத்துமீறி நுழைந்து ரயில்வே தொழிலாளர்கள் கைது

திருவாரூர், மே. 13—

இரயில்வே தொழிலாளர்கள் அமைதியாக தங்கள் குடியிருப்புகளில் இருக்கும் போதே. தமிழக அரசின் காவல் துறையினர் காட்டுமிராண்டித்தனமானமுறையில அவர்களை கைது செய்து சிறையிலடைத்து வருகிறார்கள்,

தஞ்சை மாவட்டத்தில் நாகை, திருவாரூர் மடாமங்கலம், தஞ்சை, குடந்தை, மாயூரம் ஆகிய இடங்களில் இதுபோன்ற கைதுப்படலம் நடந்துள்ளது. நூற்றுக்கும் அதிகமானோர் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளார்கள்.

### கோ வீரய்யன் கண்டனம

இந்த அநாகரிகமான செயலைக் கண்டித்து தமிழ்நாடு விவசாயிகள் சங்க செயலாளர் தோழர் வீரய்யன் ஓர் அறிக்கை விடுத்துள்ளார் அதில்கூறப்பட்டிருப்பதாவது:—

"வேலை நிறுத்தம் தவிர்க்கப்பட முடியாததாகி விட்டாலும் வன்முறைகள் எதுவும் நடவாமல் தொழிலாளர்கள் பார்த்துக் கொள்ள வேண்டும், வன்முறையில் ஈடுபடுவோர் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்படும். இதற்கு அரசு தயங்காது" என்று முதலமைச்சர் கருணாநிதி ஒரு அறிக்கையில் கூறியிருக்கிறார், இவ்வறிக்கைக்கு விரோதமாக தொழிலாளர்கள் எந்த வன்முறையிலும் ஈடுபடாமல் இருக்கும்போது அவர்கள் தங்களின் குடியிருப்புகளிலேயே அமைதியாக இருக்கையிலேயே அதிகமானோரைக் கைது செய்திருப்பது மிகபடுமோசமான அடக்குமுறை நடவடிக்கையாகும். இந்தப் போக்கை அரசும், அதன் காவலதுறையும் கைவிட வேண்டும்என்று வற்புறுத்தியுள்ளார்.

(மேற்பத்தி தொடர்ச்சி)

வேண்டுமென்றே அரசியல் காரணங்களுக்காக கைது செய்து போலீஸ் ஸ்டேசனிலும், ஜெயிலுக்குள்ளும் அடித்துசித்திரவதைசெய்ய வேண்டும் என்னும் நோக்கத்தோடு இக்காரியத்தை செய்துள்ளார்கள்.

எனவே இந்த அடக்குமுறைக்கு எதிராகமாவட்ட ஆட்சித் தலைவருக்கும், மாவட்ட போலீஸ் அதிகாரிக்கும் தகவல கொடுக்கப் பட்டிருக்கிறது. உடனே இவர்களை விடுதலை செய்ய வேண்டுமென்று கண்டன ஊர்வலமும், நோட்டீஸ் மூலம் பிரச்சாரங்களும் நடைபெற்று வருகிறது,

### எஸ்பிக்கும், கலெக்டருக்கும அர்ந்தநாரி கோரிக்கை

மார்க்சிஸ்ட் தோழர்கள் மீது பொய்வழக்கும், தாக்குதலும் தொடுத்த போலீஸ் அதிகாரிகள் மீதும், சிறை அதிகாரிகள் மீதும் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று வற்புறுத்தி மாவட்ட கலெக்டருக்கும், போலீஸ் அதிகாரிக்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சேலம்-தர்மபுரி மாவட்ட கலெக்டரை, கோரியுள்ளார்.

---

கோவைப் பகுதியில்

# இஞ்சினீயரிங் அரங்கத்தில்

## ஊதிய உயர்வுக்காகவும், பழிவாங்கலை எதிர்த்தும்

# போராட்டங்கள்

கோவை, மே 13—

கோவைப் பகுதியில் இன்சீனியரிங் தொழிலாளர்கள் தங்களது நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராட்டங்களில் ஈடுபட்டு வருகின்றனர்.

இந்தியாவில் குறிப்பிடத்தக்க மின்சார பொருள்களை தயாரிப்பாளரான ஜி. இ.சி. யின் துணை ஸ்தாபனமான கோவை மத்தம் பாளையத்திலிருக்கும் "புளூ மவுண்ட் செராமிக்ஸ்" தொழிலாளர்கள் தங்களுடைய ஊதிய உயர்வு கோரிக்கைக்காக 24-7-73-ம் தேதி ஒரு வேலைநிறுத்த போராட்டம் நடத்தினர். அதைத் தொடர்ந்து ஒரு மாதகாலம் தொடர்ந்து போராடி இடைக்கால சம்பள உயர்வாக ரூபாய் 25 பெற்று இறுதியாக சம்பள உயர்வு பற்றியும் இதர கோரிக்கைகள்பற்றியும் தொழிற்சங்கத்துடன் நேர்முக பேச்சுவார்த்தையில் முடித்துக் கொள்வது என்று ஒரு உடன்பாடு லேபர் ஆபீசர் முன்னிலையில ஏற்பட்டது.

ஆனால் நேர்முக பேச்சுவார்த்தையில் நிர்வாகம் எந்தவித நியாயமான முடிவுக்கும் வாராததால் தங்களுடைய நியாயமான கோரிக்கைக்காக மீண்டும் 16-4-74-ம் தேதி முதல் தொடர்ந்து வேலை நிறுத்த போராட்டம் நடத்தி வருகிறார்கள்.

### வாதுலா என்டர்பிரைஸ்

பஞ்சாலைக்குதேவையான பாபின் உற்பத்தி செய்து வரும் வாதுலா எண்டர்பிரைஸ் நிர்வாகம் மிக குறைந்த சம்பளத்தில் வேலை செய்துவரும் பெரும் பகுதி பெண்களை கொண்ட தங்கள் தொழிற்சாலையில் தொடர்ந்து பலவருடங்களாக மாதசம்பளம்பெற்று வந்ததை திடீரென எந்த விதமான அறிவிப்புமில்லாமல் செய்த வேலைக்குச் சம்பளம் என்று சொல்லி பீஸ்ரேட் அடிப்படையில் சம்பளம் கணக்கிட்டு கொடுத்ததை ஆட்சேபித்தார்கள்.

ஆனால் நிர்வாகம் தொழிலாளர்கள் அனைவருக்கும் வேலை மறுத்து தொழிற்சாலையை மூடியுள்ளார்கள். இதை கண்டித்து மேட்டுப்பாளையம் ரோடு, பட்டேல் ரோட்டில் உள்ள தொழிற்சாலை தொழிலாளர்கள் சங்க செயலாளர்களில் ஒருவரான ஆறுமுகம் தலைமையில் 6-5-74-ம் தேதியன்று ஒரு கண்டன ஊர்வலம் நடத்தி இரண்டு மாத காலமாக போராடி வரும் மேற்படி தொழிற்சாலை தொழிலாளர்களுக்கு வெற்றி கிடைக்கும்வரை தங்கள ஆதரவை தெரிவித்துள்ளார்கள்.

இஞ்சினியரிங் அரங்கத்தில் நல்ல லாபகரமான "பம்ப் ஜெட்" தயாரித்து வரும் லிக்னேஸ்வரர் இன்டஸ்ட்டிரியல் நிர்வாகத்திடம் தொழிலாளர்கள் பலமுறை ஊதிய உயர்வு கோரியும் டைம்கார்டு போன்ற சாதாரண உரிமைகள் கோரியும் பயனேற்படாமல வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டது.

வேலை நிறுத்த நோட்டீசின் மீது லேபர் ஆபீசர் விசாரணை அறிவித்தபோது தொழிலதிகாரி முன் பேச்சுவார்த்தைக்குவராததுமட்டுமின்றி பேச்சுவார்த்தைக்கு செல்லும் நேரத்தில்விடுமுன் படித்தால் அறிவு வளரும் என்று தொழிலாளர்களை மிக ஆத்திர மூட்டி வருகிறார் ஆனால் பிரச்சனையை முடிப்பதற்கு எந்தவிதமான முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. தொடர்ந்து போராட்டம் நடைபெற்று வருகிறது.

இந்த நிர்வாகம் சென்ற போனஸ் போராட்டத்தில் நிர்வாகத்திற்கு இறுதி சடங்கு நடத்தி ஊர் பஞ்சாயத்துக் கூடித்தான் போனஸ் அட்வான்ஸ் பெற்ற பிறகு, இறுதி போனஸ் பெற்ற தொழிலாளர்கள் இந்த பிரச்சனையிலும் என்னகாலம் ஆனாலும் வெற்றி பெறும் வரை வேலை துவங்க மாட்டோம் என்று உறுதியாக போராடி வருகிறார்கள்.

### ராம் சார் பம் மெஷின்

விவசாயக் கருவிகள்' மருந்தடிக்கும், ஸ்ப்ரேயர் போன்ற உற்பத்திகள் செய்துவரும் ராம் சார் பாம் மெஷின் அங்கு வேலை செய்து கொண்டு இருந்த தொழிலாளர்கள் சங்கத்தில் சேர்ந்து இ எஸ் ஐ பி எப்டைம்கார்டு போன்ற சலுகைகள் கோரியதை அடுத்து சங்கத்தை கலந்தாலோசிக்காமல் ஒரு சம்பள உயர்வு என்ற பெயரில் ஒரு சிறியதொகை போட்டுக்கொடுத்ததை தொழிலாளர்கள் தங்களது ஆட்சேபணையை தெரிவித்து பெறறுக்கொண்ட பின் கம்பெனி ரெஜிஸ்டரை இரண்டு அல்லது மூன்று கணக்காக பிரித்து தஸ்தாவேஜுகள் தயார் செய்தது. மேலும் பல தொழிலாளர்களை சட்ட விரோதமாக ஆள்குறைப்பு என்று கூறி வேலைக்கு அனுமதிக்க மறுத்தும் வருகிறார்கள்.

இதை கண்டித்து தங்களுடைய எந்தவிதமான சலுகைகளும் பாதிக்காமல் தங்களுடைய நியாயமான கோரிக்கைகள் கிடைக்க வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்து வேலை நிறுத்தத்திற்கு தயாராகி உள்ளார்கள்.

---

நாடெங்கும்

## ரயில்வே ஊழியர்கள்

# கைது தொடர்கிறது

சென்னை, மே, 13—

போராடும் ரயில்வே தொழிலாளர்களை கைது செய்து நெஞ்சிறை கொட்டடியில்பூட்டும் மத்திய அரசின் அரக்கத்தனம் இந்திய நாடெங்கும் நாள்தோறும் நடந்து வருகிறது,

### தமிழ்நாடு

தமிழ்நாட்டில் 12ந் தேதி வரை 1719 பேர் கைது செய்யப்பட்டனர், இந்திரா அரசுக்குத் துணையாக கருணாநிதி அரசு, ரயில்வே ஊழியர்களைக் கைதுசெய்து சிறைக்குள் தள்ளும் பணியை முழு முனைப்புடன் செய்து வருகிறது.

### மைசூர்

மைசூர் மாநிலத்தில் மத்திய ரயல்வே பகுதியில் மே 12ந் தேதிவரை 290 பேர் பேர் கைது செய்யப்பட்டனர்.

மைசூர் மநிலத்தில் வேலைநிறுத்தம் துவக்கப்பெற்றதிலிருந்து இதுவரை 17 நிரந்தர ஊழியர்களும், 120 தற்காலிக ஊழியர்களும் வேலைநீக்கம் செய்யப்பட்டனர்.

### ராஜஸ்தான்

ராஜஸ்தான் மாநிலத்தில் மே 12ந் தேதி மட்டும் 229 பேர் கைது செய்யப்பட்டனர். அந்த தேதிவரை மொத்தம் கைதானவர்களின் எண்ணிக்கை 399 ஆக உயர்ந்தது,

### பம்பாய்

பம்பாயில் மே 12ந் தேதியன்று 203பேர் கைது செய்யப்பட்டனர். இவர்களில். 116 பேர் மோட்டார்மென. 84 பேர் கார்டுகள், 2 உதவி ஸ்டேஷன் மாஸ்டர்கள், ஒரு டிக்கெட் பரிசோதகர்.

### பீஹார்

பீகார் மாநிலத்தில், ஜமால்பூர் ரெயில்வே ஒர்க்ஷாப்பில் 38 பேர் கைது செய்யப்பட்டனர்.

ரயிலை மறியல் செய்ததாக 9 பெண்கள் உட்பட 80 கைது செய்யப்பட்டனர், 4 ரயில்வே ஊழியர்கள் சொத்து ஜப்தி செய்யப்பட்டது.

### ஆந்திரா

ஆந்திர மாநிலத்தில் மே 12ந் தேதிவரை மொத்தம் 574 பேர் கைது செய்யப்பட்டனர்.

---

தர்மபுரியில்

# போலீஸ், சிறை அதிகாரிகளின் அராஜகப் போக்கு

## மார்க்சிஸ்ட் தோழர்கள்மீது சதி வழக்கு-தாக்குதல்

தர்மபுரி, மே. 13—

கம்யூனிஸ்ட் கட்சி மார்க்சிஸ்ட் சேலம் தர்மபுரி மாவட்டக் குழு உறுப்பினர் தோழர் கே சி கிருஷ்ணனையும், இந்திய மாணவர் சங்க மாவட்டக் குழு செயலாளர் செ பழனியப்பனையும் 7-5-74ந் தேதி தர்மபுரி நகர போலீசார் செங்கொடிபுர கட்சி அலுவலகத்திலிருந்து கைது செய்தார்கள்.

இவர்கள்இருவரும் தண்டவாளத்தைப் பெயர்க்க முயன்ற பொழுது கைது செய்ததாக பொய் வழக்கு பதிவு செய்துள்ளனர்.

மே 7-ந் தேதி இரவு தோழர் பழனியப்பனை, ரயில்வே தொழிற்சங்க முன்னணி ஊழியர்களை காட்டவேண்டுமென்று மிரட்டியும், தகாத முறையில் திட்டியும் போலீஸ் இன்ஸ்பெக்டர் (சர்க்கிள்) கடுமையாக தாக்கியுள்ளார்

கைது செய்ததிலிருந்து இரவுவரைஉணவு கொடுக்காமல் கொடுமைபடுத்தினார்கள். 8-5-74-ந் தேதி 15 நாட்கள் விசாரணை கைதியாக தர்மபுரி சப்—ஜெயிலில் வைத்து 9-5-74 காலை அங்குள்ள கைதிகளை விட்டு, போலீசார் தோழர் எஸ் பழனியப்பனை கடுமையாக அடிக்க வைத்துள்ளார்களாம்.

இது விஷயமாக ஜெயில் சூப்ரண்டிடம் புகார்கள் செய்யப்பட்டும் அவர் இதை கவனிக்கவில்லை. தோழர் கே. சி. கிருஷ்ணனை அரூர் நகருக்கும் தோழர் பழனியப்பனை ஊத்தங்கரை ஜெயிலுக்கும் மாற்றியுள்ளார்கள் தர்மபுரி சர்க்கிள் இன்ஸ்பெக்டரும், சப்-இன்ஸ்பெக்டரும்

(3ம் பத்தி பார்க்க)

---

## புற்றீசல் விளம்பரங்கள்

# உயிர் வாழுமோ, ஒரு நாள்!

ரயில்வே தொழிலாளர்களின் வேலை நிறுத்தம் துவங்கியவுடனே, எல்லா செய்தி ஏடுகளிலும் ரயில்வே இலாகாவின் விளம்பரங்கள் முழுப்பக்கம், அரைப்பக்கம், கால் பக்கம், அரைகால் பக்கம்......என பல 'சைஸ்'களில் வெளிவரத் துவங்கி விட்டன.

அவைதான் எத்தனை எத்தனைவகையான வாசகங்கள் கொண்ட விளம்பரங்கள்!...

—ரயில்வேதொழிலாளர்க்கு மிரட்டல் வாசகங்கள் கொண்ட விளம்பரம்

—ரயில்வே தொழிலாளர்களுக்கு 'உபதேசம்' பண்ணும் வாசகங்கள் கொண்ட விளம்பரம்

—ரயில்வே தொழிலாளர் மீது துஷ்பிரச்சார வாசகங்கள் கொண்ட விளம்பரம்

—பொதுமக்களுக்கு முன் அறிவிப்பு வாசகங்கள் கொண்ட விளம்பரம்

—நாட்டின் நிலைமையை எண்ணி கண்ணீர் (?) வடிக்கும் வாசகங்கள் கொண்ட விளம்பரம்

...இப்படி—புற்றில் ஈசல் கிளம்பியதுபோல ரயில்வே இலாகாவின் விளம்பரங்கள் எல்லாமொழி ஏடுகளிலும் அன்றாடம் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

இந்தப் புற்றீசல் விளம்பரங்களில் உதாரணத்திற்கு ஒன்று பார்ப்போம்:

**"வேலைநிறுத்தமா, ரெயில் ஊழியர்களே? உங்கள் சொந்த மக்களையா தாக்கப்போகிறீர்"**

—இப்படியொரு தலைப்பிட்ட ஒரு கால்பக்கவிளம்பரம். தலைப்பைப் பார்த்தீர்களா?

அதில்தான்—பொதுமக்கள்மீது இந்திரா அரசின் ரயில்வே இலாகாவுக்கு எவ்வளவு கருணை, கரிசனம்!

பட்டினி தீர்க்க சோறுகேட்டுப் போராடிய குஜராத்தில் 130 அப்பாவி ஜீவன்களை துப்பாக்கி முனையில் கொன்று இரத்தச் சேற்றில் மூழ்கடித்த இந்திரா அரசுக்கு—

பீகாரில் கொடும் பட்டினியை எதிர்த்து மக்கள் கிளர்ந்தெழுந்த போது 36 பேரை துப்பாக்கி முனையில் 'ருசி' பார்த்த இந்திரா அரசுக்கு—

இந்த ரயில்வே போராட்டத்தின்போது பொது மக்கள் மீது எவ்வளவு கருணையும் கரிசனமும் பிறக்கிறது பார்த்தீர்களா?

அந்த விளம்பரத் தலைப்பின் கீழே உள்ள முதல் இரண்டு வரிகளைப் பாருங்கள்:

**"வேலைநிறுத்தம் செய்ய எந்த நேரம் பார்த்தீர்! பெரும் பொருளாதாரப் பிரச்னைகள் நெருங்கும் சமயம் இது..."**

பெரு முதலாளிகளுக்கும், நிலப்பிரபுக்களுக்கும், கள்ளமார்க்கெட் வர்த்தகச் சூறாடிகளுக்கும் தொண்டரடிப்பொடியாழ்வாராக இருக்கும் காங்கிரஸ் ஆட்சியில் என்றுதான பொருளாதாரப் பிரச்னைகள் இல்லாமல் இருந்தன?

ஆலைத் தொழிலாளர்கள் போராடினால்—விவசாயிகள் போராடினால்—மாணவர்கள் போராடினால்—ஆசிரியர்கள். அரசு ஊழியர்கள், டாக்டர்கள்... இப்படி ஒவ்வொரு துறையினரும் போராடும் போதெல்லாம்—

"பொருளாதாரப்பிரச்னைகள் நெருங்கும் சமயம் இது" என்று—கீறல் விழுந்த இசைத்தட்டுதானே திரும்பத் திரும்ப வைக்கப்படுகிறது! பொருளாதாரப் பிரச்னைகள் தீர்க்கத்தான் அந்த போராட்டங்களே வெடிக்கின்றன என்பது, ஆளும் மண்டைகளுக்கு உறைக்கவில்லை போலும்!

அடுத்து, அந்த விளம்பரத்தில் உள்ள மற்றொரு வாசகத்துக்கு வருவோம:

**"ரயில்வே ஊழியர்களே, ஒன்று மட்டும் நினைவு இருக்கட்டும்.......ஒவ்வொரு ஆணும் பெண்ணும் குழந்தையும் கூடியும கஷ்டப்படும"**

ஆணும், பெண்ணும் குழந்தையும் குட்டியும் கஷ்டப்படப்போவதே ரயில்வே தொழிலாளரின் போராட்டத்துக்குப் பின்னர்தானும்! அதற்கு முன்னர் அறுசுவை உண்டியுடன் அழகு மாளிகையில் மகிழ்ந்தனரோ? கேவலம்! ஒரு சாண் வயிற்றுக்குத்தானே காங்கிரஸ் ஆட்சியில மனிதன் இன்னும் போராடிக் கொண்டிருக்கிறான்!

**"லாபம் யாருக்கு? பதுக்கல்காரர்களுக்கும் கறுப்பு மார்க்கெட்காரர்களுக்கும் தான். பற்றாக்குறை நிலைமையை சாதகமாக்கிக்கொண்டு சுரண்டுவார்கள் அவர்கள்.**

—பார்த்தீர்களா? ரயில்வே தொழிலாளர் மீது பழிபோடும் இந்த வாசகத்தை?

பதுக்கல் காரர்களுக்கும் கறுப்பு மார்க்கெட் காரர்களுக்கும் பாதுகாப்புக் கூடாரமாக விளங்குவதும்—சுரண்டலுக்கு வாய்க்கால் வெட்டிக் கொடுப்பதும்—நாட்டையே சூறையாட இவர்களுக்கு முழுசுதந்திரம் வழங்குவதும் காங்கிரஸ் ஆளவந்தார்களே என்பது நாடறிந்த உண்மை.

ஆனால் இந்த உண்மையை ஒவ்வொரு போராட்டத்தின்போதும் போராடுவோர் மீது பழிபோட்டு—திரையிட்டு மறைக்கப் பார்க்கிறது காங்கிரஸின் குள்ளநரியரசு!

ஆனல் மக்களோ காங்கிரஸ் அரசை இனம் கண்டு கொண்டார்கள்.

இந்திரா அரசு ரயில்வே இலாகாவின் கோயபல்ஸ் புளுகு விளம்பர பிரச்சாரங்களெல்லாம் ஒருநாள் கூட ஜீவிக்காது. ஏனெனில் இவை புற்றீசல்கள்!

# ‘புகை பறக்காது...’

— இன்குலாப் —

புகைபடிந்த எங்கள் முகங்களிலே—ஒரு
புதிய ஜோதி வரும்வரைக்கும்
‘புகை பறக்காது’ எஞ்சினிலே—இதைப்
புரிந்து நடந்துகொள் துரைத்தனமே!

ஏறும் விலைவாசிப் புயல்களிலே—எங்கள்
ஏழைச் சருகுகள் புரள்கையிலே
மாருதிச் சீமாட்டி என்ன செய்தார்? இந்த
மந்திரிமாரெல்லாம் என்ன செய்தார்?

பெருமுதலாளிக்குச் சலுகைகளும்—நிலப்
பிரபுக்களுக்கு அடைக்கலமும்
தருகிற சர்க்கார் திமிர் எடுக்க—தொடுத்த
துரும்புப் போரிது துரைத்தனமே!

பொய்ப்பிரச்சார மூட்டைகளை—பொது
ஜனங்கள் தீவைத்துப் பொசுக்குகிறார்
கைதுகளால் ஒன்றும் நடக்காது—இனிக்
கைகாட்டி மரங்கள் இறங்காது!

பொதுஜனங்கள் பெருந்துயரப்படுவார்—என்று
போலிக்கண்ணீர் வடிப்பவரே!
முதல்வகுப்பில் ஏ. சி. சுகங்களிலே—இந்த
மூன்றும் வகுப்பை நினைத்ததுண்டா?

இதுவரை ரயில்களா கூவியது?—மக்கள்
இதயத்தின் ஓலமே கூவியது
இதுவரை பறந்தது கரிப்புகையா?—இல்லை
எங்களின் ஏக்கப் பெருமூச்சே!

பொதுஜனம் போடும் ஆக்கினைதான்—இந்தப்
போராட்ட ரூபங்கள் புரிந்து கொள்க
எதுவரை எங்களை ஆதரிப்பார்?—நீங்கள்
இறங்கும்வரை இதைப் புரிந்து கொள்க!

லட்சோப லட்சம் ஊழியர்கள்—கூடி
லட்சிய யாத்திரை தொடங்கிவிட்டோம்
அச்சுறுத்தல் இனிப் பலிக்காது—சத்திய
ஆவேசம் என்றைக்கும் அடங்காது

★

# அரசின் அசட்டையைப் போக்கிட
# 15-ந் தேதி பொது வேலை நிறுத்தத்தில் இறங்குவீர்
## மதுரையில் கூடிய கட்சி, தொழிற்சங்க பிரதிநிதிகள் அறைகூவல்

மதுரை, மே. 13—
மே 15-ந் தேதி பொது வேலைநிறுத்தத்தில் தமிழகத்தில் உள்ள அனைத்து உழைப்பாளர்களும் பங்கு கொள்ளவேண்டும் என்று மதுரையில் கூடிய அரசியல் கட்சிகள் தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் அறைகூவல் விடுத்துள்ளனர்.

கடந்த 13-ந் தேதியன்று இங்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, இந்தியக் கம்யூ. கட்சி, புரட்சி பார்வர்டு பிளாக் ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகளும், சி ஐ டி யூ, எச். எம். எஸ். ஏ ஐ டி யூ சி சங்கங்களின் பிரதிநிதிகளும் அடங்கிய கூட்டம் நடந்தது.

இக்கூட்டத்துக்கு புரட்சி பார்வர்டு பிளாக் தலைவர் வழக்கறிஞர் எஸ். ஆண்டித் தேவர் தலைமைவகித்தார் கூட்டத்தின் இறுதியில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் அடிப்படையில் கீழ்க்காணும் அறிக்கை ஒன்று வெளியிடப்பட்டது.

அது வருமாறு:—
கடந்த 8—5—74-ந் தேதியிலிருந்து இரயில்வேத் தொழிலாளர்கள் தங்களது 6 அம்சக் கோரிக்கை மீது வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டு வருகின்றனர். அரசின் எந்திரங்கள் இந்த வேலை நிறுத்தத்தை மிகவும் குறைந்தளவு மதிப்பீடு செய்ய பொதுமக்களை தூண்டும் வகையில் பிரச்சாரம் செய்தும் வேலைநிறுத்தம் முழு வெற்றிபெற்றுள்ளது.

இந்நிலையில் அரசு உடனடியாக, கைது செய்யப்பட்ட அனைத்துத் தலைவர்களையும் விடுதலை செய்வதுடன், இவர்கள் மீது போடப்பட்டுள்ள வழக்கு மற்றும் தண்டனைகளையும் உடனடியாக ரத்து செய்து பேச்சு வார்த்தைகளைத் தொடர்ந்து நடத்தி கோரிக்கைகளை நிறைவேற்றி வேலைநிறுத்தத்தை முடித்து வைக்கும்படி இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

மேலேகண்ட கோரிக்கைகளை வற்புறுத்தவும், அசட்டையாக இருக்கும் அரசின் போக்கை மாற்றவும், தமிழகத்தில் உள்ள அனைத்துத் தொழிற்சாலை, ஷாப், மற்றும் இதர உழைக்கும் தொழிலாளர்கள் அனைவரும் இரயில்வேத் தொழிலாளர்களின் இப் போராட்டத்தை ஆதரித்து 15-5-74-ந் தேதியன்று ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்யுமாறு வேண்டிக்கொள்கிறோம்.

இவ்வாறு அந்த அறிக்கையில் குறிப்பிட்டுள்ளது.

இந்த அறிக்கையினை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, சி ஐ டி யூ சார்பில் வி. கார்மேகமும், இந்தியக் கம்யூனிஸ்ட், ஏ ஐ டி யூ சி சார்பில் எம். ராமமூர்த்தி, எச் எம் எஸ் சார்பில் பி. சுப்பிரமணியம், புரட்சி பார்வர்டு பிளாக் சார்பில் எஸ். ஆண்டித்தேவர் ஆகியோர் விடுத்துள்ளனர்.

### துரைச்சாமிபுரத்தில் வாலிபர் முன்னணி

கழுகுமலை, மே 13—
நெல்லைமாவட்டம் கழுகுமலை அருகில் உள்ள துரைச்சாமி புரத்தில் ஜனநாயக வாலிபர் முன்னணி அமைக்கப்பட்டது.

கடந்த 10ந்தேதி அமைக்கப்பட்ட இக்கிளைக்கு தலைவராக எஸ். ராஜாராம், செயலாளராக டி. எஸ். ஜெயாராமன். பொருளாளராக சே. பாலுச்சாமி மற்றும் 8 பேர் உறுப்பினர்களாகக் கொண்ட நிர்வாகக்குழு அமைக்கப்பட்டது.

### இடைக்கால நிவாரணம் டேன்சி தொழிலாளர்க்கு இயக்குனரின் கண்துடைப்பு

திண்டுக்கல், மே, 10—
தமிழக சிறு தொழில் நிறுவனக்கழகம், தொழிலாளர்களுக்கு ஊதிய நிர்ணயம் செய்யும் வரை 1-4-74 முதல் இடைக்கால நிவாரணமாக ரூ. 30 தருவதாக அறிவித்துள்ளது.

இதை ஆட்சேபனை செய்து ஜனவரி முதல் நிவாரணம் அளிக்கவேண்டும் என திண்டுக்கல் பூட்டு தொழிலாளர் சங்கம் கோரியுள்ளது.

—ந. நி.

### உண்ணு விரதத்தை கிண்டல் செய்தாராம்
#### போலீசார் மீது அதிகாரிகளிடம் புகார்

எழுமலை;மே. 13—
விலைவாசி உயர்வை எதிர்த்து கடந்த 3ந் தேதியன்று எழுமலையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி; அ. தி. மு. க. சார்பில் நடந்த உண்ணுவிரதப் போராட்டத்தை இழிவு படுத்தும் நோக்கத்துடன பிரச்சாரம் செய்ததாக கனகராஜ் என்ற போலீசார் மீது புகார் செய்யப்பட்டுள்ளது. சுமார் 25பேர் கலந்து கொண்ட இந்த உண்ணு விரதத்தினைப் பார்த்து ஏராளமான பொதுமக்கள் ஆதரவு அளித்தனர்.

அன்று பகல் 1 மணியளவில் காளிராஜ் என்ற போலீஸ் ‘டூட்டி’யில் இருந்த மற்றொரு போலீஸ் பழனிச்சாமியை அனுப்பி உண்ணு விரதம் இருந்தவர்கள் மத்தியில் உட்காரவைத்தாராம், அவருக்கு ஒரு கலரை அனுப்பி வைத்து அதைக் குடிக்கச் செய்து அதன் மூலம் உண்ணுவிரதத்தை இழிவுபடுத்த திட்டமிட்டாராம், இதையறிந்த உண்ணு விரதத் தோழர்கள் கலரைப் பிடுங்கி வெளியில் வீசியதோடு, மப்டியில இருந்த போலீசையும் வெளியே தள்ளி அனுப்பி விட்டனர்.

இதனால ஆத்திரம் கொண்ட போலீஸ் காளிராஜ், உண்ணுவிரதம் என்று சொல்லிக்கொண்டு இட்லியும் தோசையும் சாப்பிடுகிறார்கள் என்று பொய்ப் பிரச்சாரம் செய்தாராம்.

இது சம்பந்தமாக போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் மற்றும் உயர் அதிகாரிகளுக்கும் புகார் மனுக்கள் அனுப்பி சம்பந்தப்பட்ட போலீசார் மீது நடவடிக்கை எடுக்கும்படி வற்புறுத்தி புகார் செய்யப்பட்டுள்ளது.



### திண்டுக்கல்
# காவல் துறையின் தி மு கழக பணி

திண்டுக்கல், மே 13—
திண்டுக்கல்லில் சென்ற 9—5—74 காலை 11 மணிக்கு அமைதியாக ஒரு இடத்தில் கூடியிருந்தஇரண்டு சகோதரிகள் உட்பட 55 இரயில்வே தொழிலாளர்களை போலீசார் கைது செய்து லாரியில் ஏற்றி காவல் நிலையத்தில் கொண்டு வந்து அடைத்தனர்,

இந்த “வீரசாதனையை” வயர்லஸ் மூலம் மதுரைக்கும் தகவல் தந்தனர்.

24 மணி நேரம் காவலில் வைத்தவர்களை 10-ந் தேதி காலை அரசியல் அடிப்படையில் பிரித்தனர். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் சங்க தொழிலாளர்களையும், சோஷலிஸ்ட் சங்க தொழிலாளர்களையும் மட்டும் தனித்தனியாக உட்காரும்படி போலீஸ் அதிகாரி ஆணையிட்டார். அதன்படி தொழிலாளர்கள் பிரிந்து உட்கார்ந்தனர். டி. ஆர். இ. யூ. வைச் சேர்ந்த 7 பேரும், எச். எம். எஸ்ஸைச்சார்ந்த 10 பேரும், ஆக 17 பேர்களை மட்டும் வைத்துக் கொண்டு மற்றவர்களை ஒன்றும் கேட்காமல் விடுதலை செய்து விட்டனர் போலீசார்.

அவர்கள் அத்தனை பேரும் தி மு க பேரவை சங்கத்தை சேர்ந்தவர்கள். இவர்கள் வெளியே போக சந்தோஷமின்றி தயங்கித் தயங்கி நின்றனர். ஆனால் அதிகாரியோ தெளிவாகச் சொல்லி விட்டார் “இவர்களைமட்டும் கைது செய்ய ஆர்டர் வந்துள்ளது. மற்றவர்களை நாங்களை கைது செய்ய மாட்டோம்” என்று கூறி விட்டாராம்.

அதன்படி தி மு க பேரவைத் தொழிலாளர்கள் திரும்பி வந்து விட்டனர்.

கம்யூனிஸ்ட்களையும் சோசலிஸ்டுகளையும் மட்டும் தான் கைது செய்கின்றனர். தி மு க சங்க தொழிலாளர்களை தி முக அரசும், அதிகாரிகளும் கைது செய்யாமல் விட்டுவிட்டது குறித்து ஊரேபேசுகிறது;

இது நகர போலீஸ் அதிகாரிகளின் கைவரிசையா? அல்லது மாவட்ட காவல் அதிகாரியின் கழகப்பணியா? அல்லது கழக அரசின் கையாலாகாத்தனமா? என்பது தான் இன்று இங்குள்ள தொழிலாளர்கள் மற்றும் மக்கள் முன் உள்ள கேள்வியாகும்.

தபால்-தந்தி ஊழியர்கள் கூட்டத்தில் பேசிய எஸ். ஏ. தங்கராஜ் சி. ஐ. டி. யூ. ஆளவந்தார்களின் இந்தப் பிரித்தாளும் சதிக்கு தொழிலாளர்கள் இரையாகவேண்டாம் என்று எச்சரித்தார் ஒன்றுபட்டு நில்லுங்கள் வெற்றி கிட்டும் வரை போராடுங்கள் என்று அறைகூவல் விடுத்தார்.

### குமரி மாவட்டத்தில்
# வாலிபர் சங்க கிளைகள் அமைப்பு

சாமியார்மடம், மே 13—
குமரி மாவட்டத்தின் பல பகுதிகளில் சோசலிஸ்ட் வாலிபர் சங்கக் கிளைகள் அமைக்கப்பட்டுள்ளன.

#### மணவாளக்குறிச்சி

இங்கு நடந்த வாலிபர் சங்கக் கிளை அமைப்புக் கூட்டத்தில், மாவட்டச் செயலாளர் தோழர் கே. மாதவன் கலந்து கொண்டு பேசினார். கிளைத் தலைவராக தோழர் என். முருகேசனும் செயலாளராக தோழர் வி. ராமச்சந்திரனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

#### கொல்லுங்கோடு

இங்கு அமைக்கப்பட்ட கிளையின் தலைவராகதோழர் வேலாயுதனும், தோழர் ரவீந்திரனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாவட்டக்குழு உறுப்பினர் தோழர் சி எம் ஐவின் கலந்து கொண்டார்,

#### மஞ்சாலுமூடு

இக்கிளைக்கு தோழர்கள் கிருஷ்ணனும், ராஜேந்திரனும் முறையே தலைவராகவும், செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மாவட்டக்குழு உறுப்பினர் தோழர் என். ராமச்சந்திரன் கலந்து கொண்டார்.

#### மாலைக்கோடு

இங்கு ஏற்படுத்தப்பட்ட கிளைக்கு தோழர்கள் மோகனதாசும், ஸ்ரீகண்டன் நாயரும் முறையே தலைவராகவும், செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

மாவட்டக்குழு உறுப்பினர் ராமச்சந்திரன் இக்கூட்டத்தில் கலந்து கொண்டார்.

#### கோட்டார்

இங்கு அமைக்கப்பட்ட கிளையின் தலைவராக இ எஸ் மோகனும், செயலாளராக ஏ ஐ முத்துவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இக்கூட்டத்தில் மாவட்டத் தலைவர் தோழர் சி. கனகராஜ் கலந்து கொண்டு உரையாற்றினார்.

### புதிய நிர்வாகிகள்

தஞ்சாவூர், மே. 11-
தமிழ்நாடு உணவுப்பொருள் வழங்கு கழக நவீன அரிசி ஆலை ஊழியர்கள் சங்கக் கூட்டம் கடந்த 1 ந்தேதி சிவகெங்கை பூங்காவில் எஸ். சிவப்பிரகாசம் தலைமையில் நடந்தது.

அக்கூட்டத்தில் புதிய நிர்வாகிகளாக கு. தென்னன் தலைவர் ஜனார்த்தனன் துணைத்தலைவர் சுப்ரமண்யம் செயலாளர் ரவிச்சந்திரன் துணைச் செயலாளர் எஸ் சிவப்பிரகாசம் பொருளாளர் ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

5 பேர்கொண்ட செயற்குழு தேர்ந்தெடுக்கப்பட்டன.

### பஸ் கட்டண உயர்வை எதிர்த்து
# ஒன்றுபட்ட போராட்டம்
## பொதுமக்களுக்கு அனைத்து கட்சி அறைகூவல்

திருநெல்வேலி, மே, 12—
பஸ் கட்டண உயர்வை எதிர்த்துப் போராட முன்வர வேண்டுமென்று இங்குள்ள அனைத்துக் கட்சிகளும் ஓர் அறிக்கையில அறைகூவல் விடுத்துள்ளன,

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் சு. பாலவிநாயகமும் — இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் எஸ். ஏ. முருகானந்தம் எம். பி., என். எம். கிருஷ்ணன், ப. காந்தராஜ், கே. செல்லையா, பி; ராஜகோபால் ஆகியோரும்- அ. தி. மு. க. சார்பில், ஜி. ஆர். எட்மண்ட் எம். எல் ஏ. அ. முத்தையா, எம். ஏ., மஜீத் (முன்னாள் சேர்மன்), எம். கே. ஏ. காஜாமுகையதீன், (தமிழ் நாடு முஸ்லிம் லீக்) பி. பெப்பின், (சுதந்திரா) ஆகியோர் அந்த அறிக்கையில் கையொப்பமிட்டுள்ளனர்.

பஸ் கட்டண உயர்வை ரத்து செய்ய வேண்டும் என்றும், நெருக்கடி அதிகமாவதால் டிக்கட் நெருக்கடி ஏற்பட்டு கூடுதல் விலைக்கு வெளியில் விற்கப்படுகின்றன என்றும் எனவே கவுண்டர்களில் மட்டுமே டிக்கட்டுகள் விற்கப்பட வேண்டுமென்றும் - பஸ்கள் உரிய காலத்தில் வந்துபோவதை உத்திரவாதம் செய்ய வேண்டுமென்றும் அந்த அறிக்கையில கோரப்பட்டுள்ளது.

மேலும் கலலூரி மாணவர்களுக்காக கல்லூரிகளே பஸ் வசதி செய்யவேண்டுமென்றும், கூட்டம் அதிகமாக இருக்கும்போது கூடுதல் பஸ் விட வேண்டுமென்றும் வற்புறுத்தியுள்ளன.

பஸ் அதிபர்களுக்கு நியாயமான விலையில் டயர் டியூப்மற்றும் ஸ்பேர்பார்ட்ஸ்கள் கிடைக்கவும் மத்திய-மாநில அரசுகள் உத்திரவாதம் செய்ய வேண்டுமென்றும் கோரியுள்ளன.

### சாதகமான அறிவிப்பு......

1-ம்பக்கத் தொடர்ச்சி

தைப்பற்றி போராட்டக்குழு பரிசீலித்தது இது காரியத்துக்கு உதவாத கச்சாத்தாக இருப்பதால இதை ஒப்புக்கொள்ள முடியாது. போராட்டக்குழு சமரசத் தீர்வுக்கு என்றுமே தயாராக இருக்கிறது, ஆனால் இன்றைய நிலைமையில வேலை நிறுத்தத்தைக் கைவிட முடியாது.

அரசாங்கத்திடமிருந்து திட்டவட்டமான அனுகூலம் ஏதாவது கிடைக்குமென அறிய வந்தால், உடனே பேச்சு வார்த்தைக்கு தயாராவோம்,

அரசாங்கம் எந்தவிதமான புதிய நிதி ஒதுக்கீடுகளுக்கும் தயாராக இல்லை என்று பிரதமர் திட்டவட்டமாக அறிவித்திருக்கிறார். இதுவிஷயம் என்னவென்று தெரிந்தவுடன் பேச்சு வார்த்தை ஆரம்பிப்போம்; இப்பொழுது சிறைக்கு வெளியேயுள்ள தலைவர்கள் கூடிப் பேசுவோம்—என்று அறிக்கைவிட்டுள்ளனர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ் ரோடு மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத்தையா.

# தி. மு. க. அரசே, நண்பனைப் போல் நடித்து நயவஞ்சகம் புரியாதே!
# இரயில்வே தொழிலாளர்களின் வீடுகளுக்குள் நுழையாதே! பெண்களைத் துன்புறுத்தாதே!
# போலீஸ் அடக்குமுறைகளைக் கைவிடுக! தலைவர்களையும் ஊழியர்களையும் விடுதலை செய்க!
# போராடும் தொழிலாளர்களின் பக்கம் நின்றிடுக!